REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: சித்திரை 21உ வியாழன் (3—5—56) ★ ★ வெளியூர்: சித்திரை 22உ வெள்ளி (4—5—56) [இதழ் 375

## 48 மணி நேரத்தில் 207 விடுதலை வீரர்கள் பலி

அல்ஜீரியர், மே 2—

பிரெஞ்சு இராணுவத்தினர், ஒவ்வொரு 24 மணி நேரத்திற்கும், அல்ஜீரிய விடுதலைக் கிளர்ச்சியில் ஈடுபட்டிருக்கும் வீரர் பலரின் உயிரைக் குடிக்கும் விபரம் ஒழுங்காகத் தரப்பட்டு வருகிறது.

கடந்த 48 மணி நேரத்தில் மட்டும் 207 அல்ஜீரிய வீரர்களை பலி கொண்டனராம், பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகள்!

# அநீதி இழைக்கும் டெல்லிக்கு அனுமந்தையா சாட்டை

## 'இரண்டாம் திட்டத்திலும் தென்னாட்டிற்கு துரோகமா?'

## 'இரயில்வே அபிவிருத்தி வட நாட்டிற்கு மட்டும்தானா?'

## 'ஆட்சேபத்திற்கு நேர்மையான பதில் கூருமை கண்டு அதிருப்தி அடைகிறேன்'

*பண்டித நேரு முன்னிலையில் மைசூர் முதல்வர் குமுறல்*

புதுடில்லி, மே. 3—

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்னாட்டிற்கு டெல்லி ஏகாதிபத்தியவாதிகள் இழைத்த அநீதி, தொடர்ந்து இரண்டாம் திட்டத்திலும் இழைக்கப்பட்டிருக்கும் கொடுமை குறித்து மைசூர் முதன் மந்திரி அனுமந்தையா, மனம் குமுறியிருக்கிறார்.

பண்டித நேருவை எதிரில் உட்கார்த்தி வைத்துக்கொண்டு, அந்தப் பெரிய மனிதர் தென்னாட்டிற்கு இழைக்கும் அநீதியைச் சுட்டிக் காட்டி, நியாயம் கோரியிருக்கிறார் அனுமந்தையா.

தேசீய அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்தில், மைசூர் முதலமைச்சர், தென்னாட்டின் நலன்களுக்காக, தென்னாட்டிற்கு அபிவிருத்தித் திட்டங்களில் நியாயமான—நேர்மையான பங்கு தரப்பட வேண்டும் என்று, விரமுழக்கமிட்டதாகத் தெரிய வருகிறது.

அனுமந்தையா கடந்த செவ்வாயன்று பேசியதாகக் கூறப்படுவதாவது:—

"திட்டத்தின்கீழ் பல்வேறு பிரதேசங்களுக்கும் நிதி ஒதுக்குவதில் நியாயமாக டெல்லி சர்க்கார் நடந்துகொள்ள வேண்டும்

"பம்பாய்க்குத் தெற்கே, தென்னாட்டிற்கும் — வடநாட்டிற்கும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் நிதி ஒதுக்கப்பட்டதில் சமநிலை இருக்கவில்லை; பெரும் வேறுபாடு—பாரபட்சம் இருந்தது.

"இந்த அநீதியைத் தொடர்ந்து இழைப்பதாக உள்ளது, இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்!

"இரயில்வே அபிவிருத்திக்காக, ரூ. 1,125 கோடி செலவிட இந்தத் திட்டத்தில் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

"ஆனால், இந்தத் தொகையில் சிறிதளவுகூட தென்னாட்டிற்கு பயன்படப் போவதில்லை. ஐதராபாத், மைசூர், சென்னை மாநிலங்களில், ஒரு மைல் நீளம்கூட புதிய இரயில்பாதை போடுவதற்குத் திட்டம் வழி செய்யவில்லை,

"ஆனால், மொத்தமாக 1,600 மைல் நீளத்திற்கு வட இந்தியாவில் புதிய இரயில்பாதைகள் அமைக்கப்படவிருக்கின்றன. ஏன் இந்த வேறுபாடு? பாரபட்சம்? அநீதி"?

இத்தனை கடுமையாக, மைசூர் மந்திரி ஆட்சேபனை எழுப்பியும், டில்லி ஏகாதிபத்தியவாதிகள் அவரது ஆட்சேபனையைப் பொருட்படுத்தாது, 'இரண்டாம் திட்ட நகலை தேசீய அபிவிருத்தி கவுன்சில் அங்கீகரிக்கிறது' என்று, புதன்

(4-ம் பக்கம் பார்க்க)

## சென்னை மந்திரிகளின் ஏமாளித்தனம்

## எல்லைகளைச் சரிபார்த்த இலட்சணம்!

## செங்கோட்டையின் வளம் கொழிக்கும் பகுதி கேரளத்திற்காம்!

சென்னை மே 2—

செங்கோட்டை தாலுகாவில், பகுதியை, கேரளத்திற்குக் கோட்டைவிட்டு வந்தார்கள் அல்லவா, சென்னை மந்திரிகள்?

கோட்டைவிட்ட பகுதிகள்தான் வளம் செறிந்தவையாம்; செல்வம் மிகுந்தவையாம்!

திரு—கொச்சி சர்க்கார், செங்கோட்டையில் தங்களுக்கு எவ்வளவு—தமிழகத்திற்கு எவ்வளவு என்று அளவெடுத்து; படம் வரைந்து அனுப்பியிருந்தார்கள். அதனைச் சரிபார்த்துவர சென்னை சர்க்கார், ஒரு குழுவை அனுப்பி வைத்தனர்.

திரு-கொச்சி சர்க்கார், செங்கோட்டையின் மிக்க வளமான பகுதிகளைத் தங்களுக்கு வேண்டுமென நினைத்து வரைந்துள்ள எல்லைக் கோட்டை, சென்னை சர்க்கார் குழுவினர், சரி என ஒப்பி வந்திருக்கிறார்களாம்.

எல்லையைச் சரிபார்த்த இலட்சணம் எப்படி இருக்கிறது பார்த்தீர்களா?

திட்டமிட்டுள்ள எல்லை நிர்ணயப்படி, தேக்குமரம், தேயிலை, காப்பி, ரப்பர் முதலிய தோட்டங்கள் செழித்த காடுகளில் முக்கால் பகுதி, திரு–கொச்சி சர்க்காருக்குப் போய்விடுமாம்.

ஆனாலும், செங்கோட்டையின் மொத்த பரப்பில், சரிபாதி சென்னைக்குக் கிடைக்குமாம். சென்னைக்குக் கிடைக்கும் பகுதியில், தாலுகாவின் மொத்த மக்கள் தொகையினரான 65,000 பேரும் அடங்கிவிடுகிறார்களாம்.

காடு வளம் மிகுந்த பரப்பு மொத்தம் 80 சதுர மைல் எனவும், இதில் 20 சதுர மைல்தான் சென்னைக்குக் கிடைக்குமென்றும் தெரிகிறது.

இந்தக் காட்டுப் பகுதிகளின் மொத்த வருமானம் ஆண்டொன்றுக்கு ரூ. 9 இலட்சம் என்றும், இதில் ரூ 60,000 மட்டுமே சென்னைக்குக் கிடைக்கும் என்றும் கூறப்படுகிறது.

சென்னைக்குக் கிடைக்கும் காட்டுப் பகுதி ஆண்டொன்றுக்கு 25 முதல் 50 அங்குலம்வரையே மழை பெறக்கூடியதென்றும், ஆனால், திரு—கொச்சிக்குக் கிடைக்கும் பகுதியில் 80 முதல் 100 அங்குலம் வரை மழை பெய்யும் என்றும் கூறப்படுகிறது.

இந்த விபரங்களை, ஒரு பிரபல தேக்கு வியாபாரி பத்திரிகையாளருக்குத் தெரிவித்திருக்கிறார்.

சென்னை மந்திரி சபையினர் பொதுவாகவே எல்லா விவகாரங்களிலும் ஏமாளிகளாய்-கோழைகளாய்-மக்களைப்பற்றி மாநிலத்தைப்பற்றிக் கவலை கொள்ளாதவர்களாய் இருப்பதால்தான், திரு-கொச்சி சர்க்கார் துணிவோடு செங்கோட்டையைத் துண்டுபோட்டுப் பெற்றுக் கொள்வதுடன், செங்கோட்டையின் வளமிக்க பகுதிகளைப் பார்த்து தங்களுக்கு வேண்டுமெனக் கேட்டு எல்லை நிர்ணயித்திருக்கின்றனர்.

ஏமாளிகளான சென்னை சர்க்காரும் அந்த எல்லைகளை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர் என்று செங்கோட்டை மக்கள் கூறுகின்றனர்.

## சென்னைக்குகிடைக்கும் மிகப் பெரிய 'உதவி'!

### மேற்கு ஜெர்மனியில் வாங்கி டில்லி ஆட்சி வழங்குமாம்!

மேற்கு ஜெர்மனியிலுள்ள ஒரு 'கம்பெனி'யிடமிருந்து 4 மிகப் பெரிய 'ஜெனரேட்டர்'களை வாங்க இந்தியப் பேரரசினர் 'ஆர்டர்' கொடுத்துள்ளதாகத் தெரிகிறது. அவற்றில் மூன்று (1,23,600 'கிலோவாட்') சென்னை மாநிலத்தில் மின்சார உற்பத்தித் தொழிற்சாலைகளுக்காக அளிக்கப்படுமாம். மற்றொன்று (47,060 கிலோவாட்) கல்கத்தாவில் ஒரு நீர்விசை நிலையத்திற்கு வழங்கப்படுமாம்.

இந்தியா வாங்கும் மிகப் பெரிய 'ஜெனரேட்டர்'கள் இதுவே முதன் முறை எனக் கூறப்படுகிறது. இவைகளை இயக்கவைக்க அக்'கம்பெனி'யின் வல்லுநர்கள் இந்தியர்களுக்கு பயிற்சி அளிப்பார்களாம்.

## தம்மம்பட்டித் துப்பாக்கிப் பிரயோக வழக்கு

## அரசாங்க தரப்பு சாட்சிகள் குறுக்கு விசாரணை செய்யப்பட்டனர்

ஆத்தூர், மே 2—

தம்மம்பட்டி துப்பாக்கிப் பிரயோக வழக்கு இன்று மீண்டும் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. அரசாங்கச் சார்பில் இரண்டு போலீஸ்காரர்களும், ஒரு ஹெட்-கான்ஸ்டபிளும் சாட்சியம் அளித்தனர்.

பப்ளிக் பிராசிகியூடர், அவர்களை விசாரித்தபின், தோழர்கள் சார்பில் வழக்கறிஞர் செட்டோ அவர்கள், சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்தார்.

மீண்டும் வழக்கு 11—5—56-ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது

வழக்கைக் கவனிப்பதற்காகத் தோழர்கள் எம். பி. சுப்பிரமணியம், எம்.எல்.ஏ, இராமலிங்கம், குப்புசாமி, கே. எஸ் மணி ஆகியோரும், கழகத் தோழர்களும், முல்லைவாடி, உலிபுரம், நரசிங்கபுரம், கூடமலை, பெத்தநாய்க்கன் பாளையம் கழகத் தோழர்களும், பொதுமக்களும் ஏராளமாக நீதிமன்றத்திற்கு வந்திருந்தனர்.

## கள்ளக்குறிச்சி தோழர்கள் வழக்கு

### 12 பேருக்கு அபராதம்

9—4—56ல், வழக்கு மீண்டும் 11—4—56 அன்று தள்ளிவைக்கப்பட்டது.

11—4—56 அன்று மு. பாண்டியன் உள்ளிட்ட தோழர்கள் 12 பேருக்கும் முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் ரூ. 5 அபராதமும்—கட்டத்தவறினால் 1 வாரம் சிறைத் தண்டனை எனத் தீர்ப்பளித்தார். தி. மு. கழகத் தோழர்கள் மு பாண்டியன், தே. சுகதேவ், து. மப்பு ஆகியோர் தவிர, மற்ற 9 பேர்கள் அபராதம் கட்டிவிட்டனர்; மு பாண்டியன் உள்ளிட்ட மூன்று தோழர்களும் சிறை சென்றனர்.

மற்றும், 17—4—56 அன்று சன்னகேசவலு உள்ளிட்ட தோழர்கள் மீது நடைபெற இருந்த வழக்கு மீண்டும் 1—5—56-க்கு தள்ளிவைக்கப்பட்டது.

கள்ளக்குறிச்சி வட்டம் அக்ரா பாளையம் தி. மு. கழகத் தோழர்கள் கள்ளக்குறிச்சி வழக்கிற்காகத் தோழர் க. வேலாயுதம் அவர்களிடம் 87—8—0 அளித்தனர் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## தி. மு. க. பொதுக்குழு

### 16—5—56-ல் திருச்சியில் நடைபெறும்

திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக்குழுக் கூட்டம், மாநில மாநாடு நடைபெறும் பந்தலில் அமைந்துள்ள 'பொதுக்குழு விடுதி'யில் 16—5—56 புதன்கிழமை காலை 10 மணி யளவில் நடைபெறும்.

—தலைமை நிலையம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## எவ்வளவு தெரியுமா?

புதுடில்லி, மே. 1—

பர்மாவிலுள்ள தொழில்களில் ரூ. 2½ கோடிக்கு இந்தியர் மூலதனம் போட்டுள்ளதாகவும், ஜப்பானத்தில் ரூ. 15,20,00,000-க்கு முதலீடு போடப்பட்டிருக்கிறதென்றும் பிரதமர் நேரு மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

பாகிஸ்தானிலும், இலங்கையிலும் தொழில்களில் இந்தியர் எவ்வளவு மூலதனம் போட்டுள்ளனர் என்ற விவரங்கள் கிடைக்கவில்லையென்றும் அவர் கூறியுள்ளார்.

நில வளப் பாதுகாப்பு வேலைகளுக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 26,83,00,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது; முதலாவது திட்டத்தில் ரூ. 8,25,00,000 ஒதுக்கப்பட்டிருந்தது.

நம் நாடு
தி. மு. க. தினஇதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 3—5—'56 வியாழன்

# நமது சமூகப் பணி!

'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாவர் இந்த நாட்டிலே' என்று, கவிதை புனைந்தார், புதுமைக் கவி எனப் போற்றப்படும் பாரதி. ஆனால், 'ஆண்களுக்குப் பெண்கள் அடிமைகள்' என்பது, இந்து சமூக அமைப்பின் அடித்தளங்களுள் ஒன்று. 'இந்த அடிப்படை என்றென்றைக்கும் மாறவே கூடாது' என்று விரும்பும் பழமை வெறியர்கள் ஏராளம் உண்டு என்பதை, பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கும் மசோதா ஒன்று குறித்து மக்கள்சபையில் நடைபெறும் விவாதத்தை ஊன்றிக் கவனித்தால் புலப்படும்.

எதிர்காலத்தில் சமுதாயம் எத்தன்மையானதோர் உருவத்தைப் பெறவேண்டும் என்பது குறித்து, வெள்ளையருக்கு எதிராக சுதந்திரப் படை திரட்டியவர்கள் சிந்தித்ததே இல்லை எனத் திட்டமாகக் கூறலாம்.

வெள்ளையரை விரட்ட குரல் தந்த காங்கிரஸ் தலைவர்கள், தங்கள் உள்ளத்தில் இடமளித்திருந்த அரசியல் சுதந்திரம் வேண்டுமென்ற இயற்கையான—தேவையான ஆசையை ஈடேற்றிக் கொள்வதில் காட்டிய அக்கறையில், ஆயிரத்தில் ஒரு பகுதியைக்கூட, கிடைக்கும் அரசியல் சுதந்திரத்தைக் கொண்டு, மக்களின் வாழ்வில் எப்படிப்பட்ட ஒரு முன்னேற்ற நிலையை சிருஷ்டிப்பது என்ற சிந்தனைக்குக் காட்டவில்லை.

சீர்குலைந்திருந்த வாழ்வைச் சுட்டிக் காட்டி, இந்தச் சீர்குலைவைச் சரிசெய்ய சுதந்திரம் வேண்டுமென்றனர்; ஆனால், சீர்குலைவிற்கான மூல காரணத்தை விளக்க மறுத்துவிட்டனர். இந்தியத் துணைக்கண்டத்து மக்களின் வாழ்க்கை முன்னேற முடியாததற்கான—அவர்கள் முழு மனிதர்களாக வாழ இயலாததற்கான காரணங்களை ஒளிவு மறைவு இன்றி அம்பலப்படுத்துவதற்கு மாருக, ஒரு துறைக் காரணத்தை மட்டும மக்கள் முன்வைத்து, நிலைகுலைந்த வாழ்வு சீர்பட, சுதந்திரம் கிடைத்தால் போதும் என்று மட்டும் பேசிவந்தனர்.

அதன் கொடிய விளைவுதான், பெண்களுக்கு மணவிலக்கு உரிமை தரவேண்டும்; சொத்துரிமை வழங்க வேண்டும் என்று இன்று செயலாற முற்படும்போது மகத்தான எதிர்ப்புகளைச் சந்திக்கவேண்டியிருக்கிறது. இதில் வேடிக்கை என்னவெனில், இதுபோன்ற சிறுசிறு முற்போக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்கு மூர்க்கத்தனமான எதிர்ப்பு காட்டுவோர், நடவடிக்கைகளை மேற்கொள்ளும் காங்கிரஸ் கட்சியிலேயே இருப்பவர்களாவர்.

ஆண்களும் — பெண்களும், சமூகத்தின் இரு கண்கள் என்ற உணர்வை, அரசியல் சுதந்திரம் கோரிய காலத்திலேயே மக்களுக்கு ஊட்டிவந்திருந்தால் மக்கள் விடுதலைபெற வேண்டியது வெள்ளையரின் அரசியல், பொருளாதார ஆதிக்கப் பிடிப்பிலிருந்து மட்டுமல்ல—தாங்கள் அடிமையாகியிருக்கும் மதம், மூடநம்பிக்கை, பழமை வெறி அறியாமை இவற்றிலிருந்தும் விடுதலை பெற்றாகவேண்டும் என்பதையும் இயன்ற அளவு எடுத்துரைத்து, மக்களை முற்போக்கு வாழ்க்கை வழிக்கு இழுத்துவர நினைத்திருந்தால், அரசியல் சுதந்திரம் பெறுவது எந்த வகையிலும் தடைப்பட்டிருக்காது. இன்று, 'பெண்களுக்கு உரிமைகள் கூடாது' என எதிர்ப்பவர்கள், காங்கிரசாராக இருந்திருக்கமாட்டார்கள்.

மிக மிகப் பிற்போக்கானவர்கள் என்று தங்களை நிரூபித்துக் கொண்டிருக்கும் வடநாட்டு ஆட்சியாளர்கள், நிர்ப்பந்தத்தின் காரணமாக மேற்கொள்ளும் இரண்டொரு பயனுள்ள நடவடிக்கைகளைக்கூட, காங்கிரசார் எதிர்ப்பது குறித்து ஆழ்ந்து சிந்திப்பவர்களுக்கு, தென்னகத்தில், தி. மு. கழகம் மேற்கொண்டுள்ள சமூக சீர்திருத்தப் பணியின் உயர் நோக்கையும் உண்மையான மதிப்பையும், மாண்பையும் புரிந்துகொள்ள முடியும்.

மக்களின் மனப்பூர்வமான சம்மதத்தைப் பெருத சட்டங்கள் எத்தனை முற்போக்கானவையாயிருப்பினும், அவற்றிற்கு எதிர்ப்புத் தோன்றுவது சாத்தியமானதே என்பதற்கு, பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கும் மசோதாமீது நடைபெறும் மக்கள்சபை விவாதம் ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.

## 'எனக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது'

### 'ஆத்மாவும் இல்லை'

மாநிலங்கள் சபையில் அம்பேத்கார்

புதுடில்லி, மே. 1—

உத்தர பிரதேச மாநிலத்தை மூன்று பகுதிகளாகத் துண்டாட வேண்டும் என்றும், மாநில புது அமைப்பு மசோதா விவாதத்தின் போது மாநிலங்கள் சபையில் டாக்டர் அம்பேத்கார் எடுத்துரைத்தார்.

உடனே உத்திர பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு உறுப்பினர், எழுந்து, 'ஐயோ! கடவுள் உங்கள் ஆத்மாவைக் காப்பாற்றட்டும்!' என்று கூறிஞராம்!

உடனே அம்பேத்கார், 'எனக்கு ஆத்மா கிடையாது; நான் ஒரு புத்தமதவாதி; என்னுடைய ஆத்மாவிற்காக பிரார்த்திக்கிற சிரமம் எவருக்கும் வேண்டாம்; நான் கடவுளை நம்பவில்லை; எனக்கு ஆத்மா கிடையாது; உங்களுக்கு நான் அந்தச் சிரமத்தை வைக்கவில்லை' என்று இடித்துரைத்திருக்கிறார்.

நாத்தீக இங்கர்சாலின் முழக்கம் போல டாக்டர் அம்பேத்கார் பேசியது இருந்ததாக செய்திகளைப் பிரசுரித்திருக்கின்றன, சில இதழ்கள்!

## கம்யூனிஸ்டுகள் கொள்கை

### மாறியிருப்பது உண்மையா?

பி. சோ. கட்சி பற்றி மத்திய அமைச்சர் கூற்று

அகமதாபாத், மே. 1—

"கம்யூனிஸ்டுகளின் கொள்கை மாறியிருப்பது 'உண்மையெனில்' அவர்கள் ஒத்துழைப்பதாகச் சொல்வதை காங்கிரஸ் ஏற்கலாம்; அவ்வாறின்றி அது தற்காலிகமாக மேற்கொள்ளும் ஒரு தந்திரமாயிருப்பின் நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்," என்று, மத்திய சர்க்கார் தொழிலாளர் அமைச்சர் கந்துபாய் தேசாய் காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் கூறினர்.

"பிரஜா சோஷலிஸ்டு கட்சியில் எத்தனை உறுப்பினர் இருக்கிறார்களோ அத்தனை விதமான கொள்கைகளும், கருத்துக்களும் அதனுள் இருக்கின்றன; எனவே, அது ஒரு நல்ல எதிர்க்கட்சியாக இயங்க இயலாமற் போய்விட்டது," என்றும் அவர் குறிப்பிட்டார்.

## பழைமைப் பிடியை ஒழிக்க முயற்சி

திருமணங்களை பகிஷ்கரிக்குமாறு மார்வாரி சங்கம் வேண்டுகோள்

கல்கத்தா, மே. 1—

"கல்யாணத்தின்போது மணமகள் 'பர்தா' (முகத்தை மூடிக் கொள்ளும் 'கோஷா' முறை) முறையைக் கடைப்பிடிக்குமாறு நிர்ப்பந்திக்கப்படும் திருமணங்களுக்குப் போகக்கூடாது; அவற்றை பகிஷ்கரிக்க வேண்டும்"

என்று, அகில இந்திய மார்வாரி சங்கம் வேண்டுகோள் விடுத்திருக்கிறது.

சங்கத்தின் சமூக நலக் கழகம், இந்தப் 'பர்தா' முறை பெண்கள் முன்னேற்றத்திற்கு ஒரு 'சாபத்தீடு' என்று கூறியிருக்கிறதாம்.

சங்கத்தவர் இடைவிடாது பிரச்சாரம் செய்தும், ஊர்வலம் நடத்தியும் 'சத்தியாக்கிரக'த்தில் ஈடுபட்டும்கூட, இந்த முறை, இன்னும் மார்வாரி குடும்பங்களில் கடைப்பிடிக்கப்படுவது கண்டு சங்கம் வருந்துகிறதாம்.

### நிர்வாகம் நிலைகுலைந்து விடுமாம்!

புதுடில்லி, எப். 30—

பம்பாய் மாநிலத்தைப் பற்றிய முடிவை வற்புறுத்தலுக்குப் பணிந்து மாற்றினால் நிர்வாகம் நிலைகுலைந்துவிடுமென்று நேருவை சந்தித்து பம்பாய் முதலமைச்சர் மொரார்ஜி தேசாய் வற்புறுத்தியதாகத் தெரியவருகிறது.

## கவனக் குறைவால்!

### ரூ. 33,750 நஷ்டஈடுதரநேர்ந்தது

வாஷிங்டன், எப். 30—

இராணுவ மருத்துவர்கள் ஒரு போர்ப்படை வீரருக்கு இரண சிகிச்சை செய்யும்போது வயிற்றில் 'டவல்' ஒன்றை வைத்து தைத்துவிட்டதற்காக ஐ. நா. செனேட், அவருக்கு ரூ. 33,750 (7,500 டாலர்கள்) நஷ்டஈடாக அளித்ததாம்.

இரகணுவ மருத்துவர்கள், அப்போர் வீரருக்கு 1945 ஜூலைத் திங்களில் இரண சிகிச்சை செய்தனரென்றும், பின்னர் அவர் இராணுவத்திலிருந்து நீக்கிஞரென்றும், 1946 மார்ச் திங்களில் மற்ருெரு இரண சிகிச்சை செய்யப்பட்டபோது, அவ்வீரரின் வயிற்றில் 32 அங்குலமுள்ள இராணுவ மருத்துவ 'டவல்' இருந்ததைக் கண்டுபிடிக்கப்பட்டதென்றும் கூறப்படுகிறது.

### அது அந்த நாட்டில்!

கல்கத்தா, எப். 30—

இருதயத்தில் இரண சிகிச்சை செய்யும் பொருட்டு, அது வேலை செய்வதை 30 நிமிடங்கள் நிறுத்தி வைக்கும் இயந்திரக் கருவியொன்றை மூன்று 'மெல்போர்ன்' டாக்டர்கள் கண்டு பிடித்திருக்கிருர்களாம்!

## பிரான்சில் மீண்டுமோர் புரட்சியா?

### மக்கள்சபைக்கு எதிராக பவுஜாதே படை திரட்டுகிருர்?

செயிட் செரே, (பிரான்ஸ்) மே 1—

இப்போதுள்ள பிரான்ஸ் நாட்டு மக்கள் சபைக்கு எதிராக, 5 இலட்சம் பிரஞ்சுக்காரர் அடங்கிய பெரும் படை ஒன்றைத் திரட்டி, பாரிஸ்நகர் நோக்கி நகர்த்தப்போவதாக பிரான்சில் புதிதாக முளைத்துள்ள வரி விதிப்பு எதிர்ப்பு இயக்கத் தலைவரான எம். பியரி பவுஜாதே இங்கு பேசியிருக்கிருர் என்று தெரிய வருகிறது.

'பிரெஞ்சுப் புரட்சியின்போது பிரான்ஸ் நாட்டின் எல்லா மாகாணங்களிலிருந்தும் பிரெஞ்சு மக்களின் சகல பிரிவினரும் தேர்ந்தெடுத்து அனுப்பிய பிரதிநிதிகள் கூடிய மாநாடுபோல இப்போதும் ஒரு மாநாடு கூட்டவேண்டும்' என்று, பவுஜாதே கோருகிருர் என்றும் அறிவிக்கப்படுகிறது.

இங்கு நடைபெற்ற தன் இயக்கத்தின் மாநாடு ஒன்றில் பேசிய அவர் குறிப்பிட்டதாவது:—

"மாகாணங்களின் பொதுப் பிரதிநிதிகள் மாநாட்டினைக் கூட்டுமாறு நாம் கேட்டிருக்கிறோம். நாட்டின் உண்மையான விருப்பத்தைத் தெரிந்துகொள்ள இந்த மாநாடு கூட்டவேண்டியது அவசியமாகும்.

"எங்களது இந்தக் கோரிக்கையை பிரெஞ்சு மக்கள் சபைத் தலைவர் நிராகரித்துவிட்டார்; 'அது அரசியல் சட்ட விரோதமான செயல்' என்று அவர் கூறினர். ஆனல் மக்கள் சபை, சட்டபூர்வமான எதையும், தான் விரும்பும்போது செய்யலாம்.

"எனவே மாகாணப் பொதுப் பிரதிநிதிகள் மாநாட்டைக் கூட்டச் செய்ய முயற்சிக்கிற எங்கள் இயக்கத்தின் கோரிக்கையை ஏற்குமாறு கோருகிறேன்.

"பாரிசின் தென்புறமான வார்சேல்ஸ் வாயிலில் 5 இலட்சம் பிரெஞ்சு மக்களின் ஆதரவோடு, மாகாணங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் கூடும் நாள் வரப்போகிறது. அந்த நாளில சட்டங்களை இயற்றும் அதிகாரம் இப்போதைய மக்கள் சபைக்கு இருக்காது; வார்சேல்ஸ் வாயிலில தான் இருக்கும்."

## சர்வதேச ஆதிக்கத்திலுள்ள மொராக்கோவின்பகுதி

### தாயகத்துடன் இணைக்க சுல்தான் முயற்சி

ரபாட், மே 1—

சுதந்திரம் பெற்றுள்ள மொராக்கோவின் சுல்தான், தனது வெளிவிவகார மந்திரியை, மொராக்கோவின் இன்னொரு பகுதியான 'டாஞ்சியர்' என்ற சர்வதேச ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதியை மொராக்கோவுடன் இணைப்பது பற்றி பேச்சுவார்த்தை நடத்துவதற்காக அனுப்பி வைத்திருக்கிருர் என்று தெரியவருகிறது.

டாஞ்சியர், இப்போது அமெரிக்கா பிரிட்டன், உள்ளிட்ட ஒன்பது நாடுகளின் ஆதிக்கத்திலிருப்பதாகும்.

### சென்னை கடற்கரையில் அணுசக்தி மணல்!

அணுசக்திக்குப் பயன்படும் 'மோனசைட்' என்னும் மணல், சென்னைக் கடற்கரையில் ஏராளமாக இருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக மக்கள் சபையில் தகவல் தரப்பட்டுள்ளது.

### ஆலைத் தொழிலாளர் ஆராச்சியின் பலன்!

'நாகபுரி துணி ஆலை ஒன்றில் பணியாற்றும் ஒருவர், எட்டு கதிர்கள் கொண்ட 'சர்க்கா'வைக் கண்டுபிடித்துள்ளார்; இச்சர்க்காவைக் கையினுலும், விசையினுலும் நூற்கலாமெனத் தெரிகிறது' என்று, மக்கள் சபையில், உற்பத்தி இலாகா துணை அமைச்சர் தகவல் தந்தார்.

### 17 மாநில மக்களிடம் ரூ. 80,000 வரை மோசடி

ஐதராபாத், மே. 1—

போலி 'லாட்டரி கம்பெனி' நடத்தி 17 மாநில மக்களிடமிருந்து ரூ. 80,000 வரை மோசடி செய்ததாக நான்கு நபர்களை ஐதராபாத் போலீசார் கைது செய்திருக்கின்றனர்.

### உடனடியாகத் துணிப் பஞ்சம் ஏற்படாதாம்!

புதுடில்லி, மே. 1—

நாட்டில் உடனடியாகத் துணிப் பஞ்சம் ஏற்படுவதற்கான அச்சம் ஒன்றும் இல்லை என வர்த்தக இலாகா அமைச்சர் மக்கள் சபையில் கூறியுள்ளார்.

## தென்னுட்டில் 65 நூற்புஆலைகளாம்

### 7-இலட்சம் கதிர்கள் பொருத்தப் படுமாம்

புதுடில்லி, மே. 1—

"தென்னுட்டில் 65 நூற்பு ஆலைகள் நிறுவப்படும்; அவைகளில் 7 இலட்சம் கதிர்கள் பொருத்தப்படும்; அவைகளுக்கு ஏற்கனவே அனுமதி வழங்கப்பட்டுள்ளது," என்று, மக்கள் சபையில், அமைச்சர் நித்யானந்த கனுங்கோ அறிவித்திருக்கிருர்.

## ரூ. 20 கோடிக்கு

### வெளிநாட்டுச் சாதனங்கள்!

புதுடில்லி, எப். 30—

1956—57-ம் ஆண்டில், உலக 'மார்கெட்'டிலிருந்து, ரூ. 20 கோடி பெறுமானத்திற்கு இங்கு தயாரிக்கப்படாத இந்திய இரயில் வேக்கான சாதனங்களும், இரயில் பெட்டிகளும், மின்சார எஞ்சின்களும் வாங்கப்படுமென கூறப்படுகிறது.

203 மின்சார இரயில் 'கோச்சு'களும், 55 மின்சார எஞ்சின்களும் வாங்கப்படுமெனவும் தெரிகிறது.

### சென்னைக்கு ரூ. 4,400 மானியம் கிடைத்தது

திருச்செந்தூரில் பனை நார் காட்சி நிலயம் ஏற்படுத்தவாம்

புதுடில்லி, எப். 29—

கைவேலைப் பொருள்களின் அபிவிருத்திக்காக, இந்திய சர்க்கார் கடனுகவும், மானியமாகவும் மேலும் சுமார் ரூ 4,71,000 அனுமதித்திருக்கின்றனர்.

பனை நார் உற்பத்திக்கான நிதர்சனக் காட்சி நிலயம் ஒன்றை திருச்செந்தூரில் ஏற்படுத்துவதற்கு சென்னை சர்க்காருக்கு ரூ. 4,400 மானியம் கிடைத்திருக்கிறது.

### சுசேதா கிருபளானிக்கு அனுமதி மறுப்பு

புதுடில்லி, மே. 1—

திருமதி சுசேதா கிருபளானி மக்கட் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று டில்லி தேர்தல் 'டிரிப்யூனல்' பிறப்பித்துள்ள உத்தரவை மறுத்து 'அப்பீல்' செய்துகொள்ள சுசேதா கிருபளானிக்கு 'சுப்ரீம்' நீதி மன்றம் அனுமதி மறுத்துவிட்டதாம்.



# கழகச் செய்திகள்

### மேலக்கற்கண்டார்கோட்டை (பொன்மலை) தி. மு. கழக ஆண்டு விழா

21—4—56ல் கழக 6-வது ஆண்டு விழா சிறப்புற நடைபெற்றது. விழாவினை யொட்டி மேலக்கற்கண்டார்கோட்டை பூராவும் தோரணங்களாலும், வளைவுகளாலும், வாழைமரங்களாலும் அலங்கரிக்கப்பட்டது; பொதுச் செயலாளரின் உருவப் படம் கழகக் கட்டிடத்துக்கு முன் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டன.

மாலை 4 மணிக்கு அண்ணு, அம்பில்-தருமலிங்கம் ஆகியவர்களுக்கும், பிப். 20 பொது வேலை நிறுத்தத்தில் சிறை சென்ற தோழர்களுக்கும் தேநீர் விருந்தளிக்கப்பட்டது.

மாலை 7 மணிக்கு ஆண்டு விழாப் பொதுக்கூட்டம், திரு வி. க. திடலில், தோழர் கே. துரைராஜ் தலைமையில் நடைபெற்றது. தலைவர். முன்னுரைக்குப் பின் தோழர் அம்பில்-தருமலிங்கம் பேசினர்; தோழர் டி. கே. கோவிந்தராசன் ஆண்டு அறிக்கை வாசித்தார்.

தோழர்கள் காஞ்சி சி. வி. இராசகோபால், போளுர் சுப்பிரமணியம் ஆகியோர் சிறிது நேரம் பேசிய பின், இறுதியாக அண்ணு அவர்கள் பேசுவதற்கு முன் பொன்மலைப்பட்டி தி. மு கழகச் சார்பில் வரவேற்பு இதழும், கைத்தறித் துண்டும் அணிவித்தனர்; மாணவ மன்றம் காந்தி வாசகசாலையின் சார்பில் மலர்மாலையும், கொல்லுப் பட்டரை ஷாப் தோழர்கள் சார்பில் கைத்தறி துண்டு அணிவிக்கப்பட்டன பின்னர் அண்ணு அவர்கள் கழக இலட்சியங்கள் பற்றி விரிவுரையாற்றினர்.

இரவு 11 மணியளவில் கழக தோழர்களால் 'கிரேக்கப் பெரியார்' 'வழக்கு வாபஸ்' என்ற நாடகங்கள் நடைபெற்றன.

• • •

27—4—56 இரவு 7 மணியளவில், கழக இல்லத்தில், தோழர் கே. துரைராஜ் தலைமையில் உறுப்பினர் கூட்டம் நடைபெற்றபோது முடிவுகள் பல செய்யப்பட்டன.

### அப்பமசமுத்திரம் தி. மு. கழகப் பொதுக்கூட்டம்

27—4—56 இரவு 8 மணிக்கு தோழர் பி. பெரியசாமி தலைமையில், கழகச் செயற் குழுக் கூட்டம் நடைபெற்றபோது, செயலாளர் சடையன் விலகல் கடிதம் ஏற்றுக் கொள்ளப்பட்டு புதிய செயலாளராக ஏ. பி. பொன்ராமன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### நத்தம் தி. மு. கழக ஆண்டு விழா

நத்தம் தி. மு கழகக்கிளையின் 4-வது ஆண்டு விழாவையொட்டி உளுந்தக்குப்பை கடை வீதியில், 26—4—56 மாலை 6 மணியளவில் ஓர் பொதுக்கூட்டம் தோழர் மணியரசன் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் அரங்கநாதன், மாணிக்கம் ஆகியோர் பேசிய பின், தோழர் அறிவுடைநம்பி கழக இலட்சியங்கள் பற்றி விரிவுரையாற்றினர்.

### நரசிங்கபுரம் தி. மு. கழகம்

22—4—56 இரவு 8 மணிக்கு சேலம்—ஆத்தூரையடுத்த நரசிங்கபுரத்தில், கழகப் பணிமனையில் தோழர் என். என். பெரியசாமி தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், திருச்சியில் நடைபெறும் மாநில மாநாட்டைப் பற்றி மக்களுக்கு 'சினிமா சிலேடு'கள் மூலம் நன்கு விளக்குவதெனத் தீர்மானிக்கப்பட்டு, மற்றும் பல. முடிவுகள் செய்யப்பட்டன.

### நரசிங்கன்பேட்டை தி. மு. கழகத் துவக்கவிழா

நரசிங்கன்பேட்டை தி மு. கழகத் துவக்கவிழாப் பொதுக்கூட்டம் தோழர் கோ. சி. மணி தலைமையில் 23—4—56-ல், அஞ்சல் அலுவலகத்திற்கு முன் நடைபெற்றது. தோழர் கே. எஸ் சௌந்தரராசன் கழகக் கொடியை ஏற்றி வைத்துப் பேசினர். தோழர் என். கிட்டப்பா கழகக் கொள்கைகளை விளக்கினர்.

### சோத்துப்பாரை எஸ்டேட் தி. மு. க. துவக்க விழா

15—4—56ல், தோழர் செல்லையழகன் தலைமையில், இங்கு தி. மு. கழகத் துவக்க விழா நடைபெற்றது தோழர்கள் பண்ணன் பூ. பி. கிருட்டிணன், ம. அழகர் ஆகியவர்கள் பேசினர்.

### மேலூர் தி. மு. கழகம்

மதுரை மாவட்டம் மேலூர் தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் தோழர் ப தங்கவேலர் தலைமையில் நடைபெற்றபோது, மதுரை—காரைக்குடி இரயில் பாதையை மேலூர் வழியாகப் போகும்படி மத்திய சர்க்காரைக் கேட்டுக்கொண்டதுடன், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### வடசெருவளூர் தி. மு. க. துவக்க விழா

22—4—56 மாலை 5 மணியளவில் கள்ளக்குறிச்சி வட்டம் வடசெருவளூரில், தி. மு. கழகக் கொடியை தோழர் தில்லை-வில்லாளன் ஏற்றிவைத்தார். பின்னர், தோழர் பழமநீ தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது தோழர்கள் தில்லை-வில்லாளன், பொன். சொக்கலிங்கம் ஆகியோர் கழகக் கொள்கைகளை விளக்கினர் பின்னர், செயலாளராக கே. ஆதம்: துணைச்செயலாளராக க. அண்ணுமலை; பொருளாளராக பி. எம பச்சையப்பன்; மாவட்டப் பிரதிநிதியாக கே. வைத்தி ஆகியோரும், செயற்குழு உறுப்பினர்களாக 15 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

# தி. மு. கழக 2-வது மாநில மாநாடு

## திருச்சியில் மே 17, 18, 19, 20-ம் நாட்களில்

பெரிய இரயில்வே நிலையத்திற்கு அருகிலுள்ள பந்தயத் திடலில் அமைந்துள்ள

## "வள்ளுவர் நகரில்"

நடைபெறும்

★

தலைவர்: **இரா. நெடுஞ்செழியன்**

துவக்குபவர்: **ஜி. பி. சோமசுந்தரம்**

கலைக் கண்காட்சித் திறப்பாளர்: **என். வி. நடராசன்**

★

கருத்துரை வழங்குதல்: **கழகச் சொற்பொழிவாளர்கள்**

நாதசுர இசை: திருவாவடுதுறை **இராசரத்தினம்**

புத்தர் வரலாறு—வில்லுப்பாட்டு: **என். எஸ். கிருஷ்ணன்**

இன்னிசை: **கே. ஆர். இராமசாமி, அனிபா, கஸ்தூரி, செல்வா**

★

நாடகங்கள்: **'புது வெள்ளம்'—'மணிமகுடம்'**

எஸ். எஸ். இராசேந்திரன் குழுவினர்

**'அட்வகேட் அமரன்'—'சுமைதாங்கி'**

எம். ஜி. இராமச்சந்திரன் குழுவினர்

★

**தி. மு. க. விருது வழங்குதல்:**

சமூகப் பணிக்காக மூவலூர் மூதாட்டி இராமமிர்தம் அம்மையாருக்கு

★

## மாபெரும் ஊர்வலம்:

17—5—56 வியாழன் காலை 9-மணிக்கு மெயின் கார்ட் கேட்டிலிருந்து வள்ளுவர் நகருக்குச் செல்லும்

## பொதுத் தேர்தலைக் குறித்து தி. மு. கழக முடிவு:

பொதுத் தேர்தல் குறித்து கழகத்தின் முடிவு எதுவாயிருக்க வேண்டும் என்பதுபற்றி மாநாட்டிற்கு வருகைதருவோரின் கருத்தறிதல்,

**19—5—56 சனிக்கிழமை நடைபெறும்**

அன்று ஒவ்வொருவரிடமும் வாக்குரிமைச் சீட்டு அளிக்கப்படும்.

## மாநாட்டுக் கட்டணம்:

நான்கு நாட்களுக்கும் சேர்த்து:

| | | ஆண் | பெண் |
|---|---|---|---|
| 1-ம் பிரிவு | ரூ. | 10—0—0 | 10—0—0 |
| 2-ம் பிரிவு | ,, | 5—0—0 | 2—8—0 |
| 3-ம் பிரிவு | ,, | 3—0—0 | 1—8—0 |

தனித்தனி ஒவ்வொரு நாளும்:

| | | ஆண் | பெண் |
|---|---|---|---|
| 1-ம் பிரிவு | ரூ. | 3—0—0 | 3—0—0 |
| 2-ம் பிரிவு | ,, | 1—8—0 | 0-12—0 |
| 3-ம் பிரிவு | ,, | 1—0—0 | 0—8—0 |

தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதி கட்டணம் (நுழைவு உட்பட): ரூ. 5—0—0

பொதுக்குழு உறுப்பினரல்லாதோர் வரவேற்புக்குழுக் கட்டணம்: ,, 25—0—0

உணவுக்கும், போக்குவரத்துக்கும் நல்ல முறையில் தனி ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

எம். எஸ். மணி, எஸ். முத்து
செயலாளர்கள்

அ. பெ. தருமலிங்கம்
வரவேற்புக்குழுத் தலைவர்

### கருங்கடல்கிராம தி. மு. க. பொதுக்கூட்டம்

27—4—56 இரவு 8 மணி... புளியங்குளம் வ. உ. சி. மைதானத்தில், தோழர் சே. அ. ... தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் என். மணியம், எஸ் நடராசன், கே. சேர்மத்துரை ஆகியோர் 'தீண்டாமையும்-திராவிட நாடும்' என்பது பற்றிப் பேசினர். பின்னர், தோழர் கி. மனோகரன் சமுதாயம்—அரசியல்—பொருளாதாரம் பற்றி விரிவுரையாற்றினர். பின்னர், கருங்கடல் பகுதியில் உடனடியாக பஸ் போக்குவரத்து ஆரம்பிக்கவும், இவ்வூரில் ஒரு லோகல் பண்டு வைத்திய விடுதி ஏற்படுத்தித் தருமாறு கேட்டுக்கொண்டும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### நீலவெளி தி. மு. கழகத் துவக்க விழா

நீலவெளி தி. மு. கழகத் துவக்க விழாப் பொதுக்கூட்டம் 22-4-56 மாலை என். கிட்டப்பா தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் கே. எஸ். சௌந்தரராசன், சி. ஜம்பு பேசிய பிறகு தோழர் ஏ வி. பி. ஆசைத்தம்பி அவர்கள் தி. மு. கழகக் குறிக்கோள்கள் பற்றியும் சமுதாய சீர்திருத்தம் பற்றியும் பேசினர்.

### சின்னுளப்பட்டியில் தி. மு. கழகப் பொதுக் கூட்டம்

28—4—56-ல், வள்ளுவர் திடலில், தோழியர் அ. வீரம்மாள் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் எஸ். சேதுபதி, ஆர். குத்தகுமூர்த்தி, எஸ். மெய்யப்பன்; தோழியர் அருள்மொழி ஆகியவர்கள் சமுதாய சீர்திருத்தம், திராவிட நாடு பிரிவினை என்பது பற்றி கருத்துரை வழங்கினர். கூட்டத்தில், பஞ்சாயத்து போர்டார் மக்களின் சுகாதார வசதிக்கு ஆவன செய்ய வேண்டுமெனக் கோரி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### இராசிபுரம் தி. மு. கழகம்

19—4—56 இரவு 8 மணியளவில் நகர தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் தோழர் பி. சின்னண்ணன் தையற் கடையில் தோழர் இரா. தேசி தலைமையில் நடைபெற்றபோது, கழகக் கட்டிட நிதிக்காக 4—8—56ல் நடைபெற்ற சிறப்புக்கூட்ட வரவு-செலவுக் கணக்குகள் பரிசீலிக்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டதுடன், கூட்டத்திற்கு அனுமதி தருவதை நகர போலீஸ் அதிகாரியே அனுமதிக்க வேண்டுமென உயர்தர போலீஸ் அதிகாரிகளைக் கேட்டுக்கொண்டும், புது சந்தைப்பேட்டையிலிருக்கும் மின்சாரக் கம்பத்திலுள்ள நகர சபைக்குச் சொந்தமான மின்சாரப் பெட்டியைப் பழுதுபார்க்காததால் நேரிடும் சிரமங்களைத் தவிர்க்க உடனே தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென நகரசபை அதிகாரிகளைக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. பின்னர், கழகத் தோழர் டி. பத்மநாபன் அன்னையார் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துக்கொள்ளப்பட்டது; மாநில மாநாட்டுப் பிரதிநிதியாகத் தோழர் வேலாயுதம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### பொன்மலைப்பட்டி தி.மு.க.

29—4—56 மாலை 6 மணியளவில், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பிறந்த நாள் விழா, கழகப் பணிமனையில், தோழர் ஏ. கருப்பையன் தலைமையில் நடைபெற்றது.

பாரதிதாசன் படத்தைத் திறந்துவைத்து, தோழர் இராமலிங்கம் பேசுகையில், 'இந்த நாட்டு கவிஞர் பாரதிதாசனுக்கு, இந்நாட்டு அரசாங்கம் எந்தவித மதிப்பும், பெருமையும் தராது வாளாவிருக்கிறது;' என்று குறிப்பிட்டார். தோழர்கள் கோவிந்தசாமி, கிருஷ்ணசாமி, தட்சிணாமூர்த்தி, சி. பாண்டியன் ஆகியோரும் பேசினர்.

# 'வடநாட்டின் மீது தென்னாடு போர் தொடுக்கும்'

## 'வடநாட்டு பெரும் மாநிலங்கள் தென்னாட்டை அச்சுறுத்துகின்றன'

## 'இப்போதைய அமைப்பில் தென்னாட்டின்மீது வடநாடு ஆதிக்கம் புரிய வாய்ப்பிருக்கிறது'

## 'உ. பி., பீகார் மாநிலங்களைத் துண்டாட வேண்டும்'

டாக்டர் அம்பேத்காரின் விளக்கமும்—எச்சரிக்கையும்

"உத்திர பிரதேசத்தையும் பீகாரையும் இரண்டு மூன்று துண்டுகளாக்கி தனித்தனி மாநிலங்களாக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

"இந்த மாநிலங்கள் எல்லாம் இப்படியே பெரியனவாக நீடிக்கு மாறு விட்டுவிட்டால், பிற்காலத்தில் தென்னாட்டிற்கும்—வடநாட்டிற்கும் பெரும் தகராறுகள் ஏற்படும் என்று கருதுகிறேன்.

"உத்திர பிரதேசம், பீகார், இராஜஸ்தான் போன்ற பெரிய, கீழ்த்தரமான மாநிலங்கள், எங்களை அச்சுறுத்துகின்றன; ஏராளமான அரசியல் விளைவுகளை உள்ளடக்கியதாகும் இந்த ஆபத்தான பிரச்சினை!

"அமெரிக்காவில் பல மாநிலங்கள் இருக்கின்றன; அவற்றின், மக்கள் தொகை ஒன்றுக்கொன்று வேறுபட்டதாக இருந்தாலும் இது குறித்து அங்கு எவரும் கவலைகொள்வதில்லை; ஏனெனில், ஒவ்வொரு மாநிலத்திற்கும் அமெரிக்க கீழ்சபைக்கு இருப்பதைப்போன்றே சமமான அதிகாரங்கள் இருக்கின்றன.

"ஆனால், இந்தியாவில் தென்னாட்டு மாநிலங்களுக்கு எதிராக வடநாட்டு மாநிலங்கள் ஒன்று திரண்டு, தென்னாட்டின் நலன்களுக்கு விரோதமாக அவர்கள் மீது குதிரை ஏற—ஆதிக்கம் செலுத்த வாய்ப்பிருக்கிறது என்பது யூகிக்கக் கூடியதே!

'இப்படி வடநாடு தென்னாட்டின்மீது ஆதிக்கம் செலுத்துமானால், தென்னாடு—வடநாட்டின்மீது போர் தொடுப்பது—இந்தியாவில் ஒரு 'உள்நாட்டுப் போர்' மூளுவது இயற்கையே! நான், சற்றுமிகையான வாசகங்களை உபயோகிப்பதாக சிலர் கருதலாம்; ஆனால், கடந்த காலத்தில் அதுபோல சம்பவங்கள் நடைபெற்றுள்ளன.

"வடநாட்டிற்கும்—தென்னாட்டிற்கும், எத்தனை வகையான வேறுபாடுகள் உண்டோ, அத்தனை வேறுபாடுகளும் இருக்கத்தான் செய்கின்றன; எனவேதான், நான், உத்தர பிரதேசத்தை மூன்று கூறுகளாகவும், பீகாரை இரண்டு துண்டுகளாகவும், மத்திய பிரதேசத்தை இரண்டு மாநிலங்களாகவும் பிரிக்கவேண்டும் என்று கோருகிறேன். இது எந்தவகையாலும், மொழிவழி மாநிலம் என்ற கொள்கைக்கு எதிரானதல்ல,"

என்று, டாக்டர் அம்பேத்கார் அவர்கள் டெல்லி மாநிலங்கள் சபையில், முழக்கமிட்டிருக்கிறார்.

மேலும் பேசிய அவர், மராட்டியர்களுக்கு பம்பாய் நகரம் தரப்படாததை வன்மையாகக் கண்டித்தார்.

"சரித்திர, பூகோள ரீதியாக பம்பாய் மராட்டியத்திற்குச் சொந்தமானதாயிருக்க, அது ஏன் மராட்டியருக்குத் தரப்படக் கூடாதென்கின்றனர், குஜராத்தியர்? கல்கத்தா மேற்கு வங்கத்துடனிருக்கக்கூடாதென்று எவரும் கூறக்காணேம். அப்படியிருக்க மராட்டியர்களின் நியாயமான உரிமையை ஏன் பறிக்க வேண்டும்?"

இவருக்குப்பின் பேசிய மாநிலக் குழு உறுப்பினராயிருந்த டாக்டர் குன்ஸ்ரூ குறிப்பிட்டதாவது:—

"அம்பேத்கார், வடநாட்டு மக்களை இழிவானவர்கள் என்று குறிப்பிட்டார்; இழிவானவர்கள் என்று அவர் வடநாட்டவரைக் குறித்தது, ஏதேனும் விஷேச அர்த்தத்துடனு, அல்லது, குற்றம் கூறவேண்டும் என்பதற்காகவா என்று தெரியவில்லை?

"உத்திரப் பிரதேசத்தை மூன்று கூறுகளாக்க வேண்டும் என்ற அம்பேத்காரின் கோரிக்கை குறித்து குன்ஸ்ரூ குறிப்பிட்டதாவது:—

"உ. பி.-யை மூன்று கூறுகளாக்கினல் ஒவ்வொன்றிலும் இரண்டு கோடி மக்கள் இருப்பர்; ஆனல், ஆந்திராவிலும், தமிழ் நாட்டிலும் மூன்று கோடி மக்கள் இருப்பர். ஆனாலும் உ. பி-யைத் துண்டாடவேணடுமாம். உ. பி., யாருக்கு என்ன தீங்கிழைத்ததோ தெரியவில்லை? எவருக்கும் தீங்கிழைக்காத காரணத்திற்காகவா, உ. பி.-யை மூன்று கூறாக்க வேண்டுமென்கிறார்கள்?

"அந்தப் பிரதேசத்தின் பொருளாதார நிலைபற்றி இப்படிக் கூறுபவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை!

"அந்தப் பிரதேசத்தின் நதி, வாய்க்கால், போக்குவரத்து முறைகளை அறிந்திருந்தால், உத்தரப் பிரதேசத்தைப் பிரிக்கவேண்டுமென்று கூறுவதே எவ்வளவு விரும்பத்தகாதது என்பதை அவர்கள் உணருவார்கள்,"

இப்படி எல்லாம் குன்ஸ்ரூ புலம்பினர் என்றால், அவர் ஒரு உ. பி. வாசி என்பதைச் சொல்லவா வேண்டும்?

---

சென்ற உலகப் போரில்

## பர்மா இந்தியருக்கு ஏற்பட்ட நஷ்டம்

புதுடில்லி, மே. 1—

சென்ற உலகப்போரில் பர்மாவில் நஷ்டமடைந்தவர்களுக்கு நஷ்ட ஈடு தருவது சம்மந்தமாக பர்மா அரசினர் இதுவரையிலும் திட்டவட்டமாக எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொண்டதாக இந்தியப் பேரரசினருக்குத் தெரியவில்லையாம்.

1941 ஆண்டு நிலவிய விலைவாசிப்படி மொத்தம் 15 கோடி 'ஸ்டர்லிங்' (ரூ. 200 கோடி) நஷ்டம் ஏற்பட்டதாக மதிப்பிடப்பட்டது. இதில் பர்மாவிலுள்ள இந்திய வம்சாவழியினருக்குச் சுமார் 7 கோடியே 30 இலட்சம் 'ஸ்டர்லிங்' (ரூ. 97·3 கோடி) பெறுமான நஷ்டம் ஏற்பட்டுள்ளதாக மதிப்பிடப்பட்டிருக்கிறதாம்.

ஜப்பானுடன் பர்மா அரசினர் செய்துள்ள போர் நஷ்டஈடு ஒப்பந்தப்படி, பர்மாவுக்கு ஜப்பான் 25 கோடி டாலர் தர ஒப்புக் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. 10 ஆண்டுகளில் இந்த நஷ்டஈடுத் தொகை பொருட்களாகவும், சேவையாகவும் தரப்படுமாம்.

---

## தொழிலாளரின் குறைந்தபட்ச ஊதியம்

### யோசனை கூற குழு நியமனம்

சென்னை, மே 2—

தோல் பதனிடும் தொழிற்சாலைகள், தோல் சரக்குகள் தயாரிப்புத் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளருக்குத் தரும் குறைந்தபட்ச ஊதியம் குறித்து யோசனைகூற ஒரு குழுவை சென்னை அரசியலார் நியமித்துள்ளனர்.

---

## கழகக் கூட்டங்கள்

★

**கோவை:**

காந்தி சௌக்

5—5—56 இரவு 7 மணிக்கு

பேசுபவர்:

என். வி. நடராசன்

★

**பந்தநல்லூர்:**

பட்டி மைதானம்

தி மு கழக ஆண்டு விழா

4—5—56 மாலை 5 மணிக்கு

தலைவர்:

பி. ஏ. லிங்கன்

பேசுவோர்:

கே. ஏ. மதியழகன்

ம. கோ. மணி

என். அசோகன்

தோழர் துரைராசன் கழகப் பண் பாடுவார்

---

## மே தின விழாப் பொதுக்கூட்டம்

★

**செங்குன்றம்:**

சத்திரம் இலாகா திடல்

5-5-56 மாலை 5-30 மணிக்கு

தலைவர்:

ப. சுந்தரமூர்த்தி

பேசுவோர்:

மு. கருணாநிதி

இளம்பரிதி

ஏ. எல். சி. கிருட்டிணசாமி

—செங்குன்றம் தி. மு. க.

★

**சென்னை—கொருக்குப்பேட்டை:**

கிருட்டிணசாமி தோட்டம்

(தியாகராயர்கல்லூரி உணவு விடுதி அருகில்)

5-வது வட்ட தி.மு.க. ஆண்டுவிழாவும்

5—5—56 மாலை 6 மணிக்கு

தலைவர்:

எஸ். எஸ். பி. லிங்கம்

பேசுவோர்:

டி. சே. சீனிவாசன்

எஸ். எஸ். தென்னரசு

---

# டெல்லியின் அநீதிக்கு சாட்டை!

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கிழமையன்று தீர்மானம் கொண்டுவந்திருக்கின்றனர்.

தீர்மானம் படிக்கப்பட்டதும், அதில் தனது ஆட்சேபத்திற்குத் தகுந்த சமாதானம் இல்லாது போகவே, கொதித்தெழுந்த அனுமந்தையா, டில்லிப் பெரிய மனிதர்களைக் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டிருக்கிறார்.

"நகல் திட்டத்தில், இலட்சிய அளவுகளை நான் ஏற்றுக்கொள்கிறேன்; ஆனல், முதலீடு விவகாரத்தில் தென்னாட்டு மாநிலங்களுக்குப் பெரும் அநீதி இழைக்கப்பட்டிருக்கிறது ஏன்? சாமராஜ நகர்—கோவை இரயில் பாதை அமைப்பு, முதல் திட்டத்திலேயே சேர்க்கப்பட்டு, பின்னர் கைவிடப்பட்டது; பின்னர், இரண்டாம் திட்ட காலத்தில் ஏற்றுக்கொள்ளப்படும் என்று கூறினீர்கள்; இப்போது இரண்டாம் திட்டத்திலும் அந்தப் பாதை அமைப்பு ஏற்கப்படவில்லையே, என்?

"நேற்றையறதினம் தென்னாட்டிற்கு இழைக்கப்படும் அநீதி குறித்து நான் எடுத்துக் காட்டினேன்; இந்தப் பாரபட்சமான நிலையைப் போக்க தீர்மானத்தில் எந்த மாற்றத்தையும் காணவில்லையே, என்?

"இது கண்டு நான் மிகவும் அதிருப்தி அடைந்திருக்கிறேன் என்பதைத் தெரிவிக்கிறேன்."

'தென்னாட்டில் எஃகுத் தொழிற்சாலைகள் நிறுவ அவசியமான மூலப் பொருள்கள் இல்லை' என்று பிரதமர் நேரு கூறினாராம்!

"அப்படியானல், வேறு தொழிற்சாலைகளை ஏன் அங்கு நிறுவக் கூடாது? வேறு தொழில்களை நிறுவுவதில் என்ன கஷ்டம்?" என்று, மைசூர் முதன் மந்திரி இடி முழக்கமிட்டதாகத் தெரியவருகிறது.

'தேவிகுளம்—பீர்மேடு விவகாரத்தில் ஏமாந்ததுபோல், இரண்டாம் திட்டத்திலும் ஏமாந்துவிடமாட்டோம்' என்று வீரம் பேசிய கோவைப் பெரிய மனிதர்—சென்னை நிதிமந்திரி சுப்பிரமணியம், டில்லியில், தென்னாட்டிற்கு இழைக்கப்பட்ட அநீதி குறித்து எதுவும் வாய்திறந்து பேசியதாகத் தெரியவில்லை.

அனுமந்தையாவும், ஆந்திர மந்திரி காளாவெங்கட்ராவும் குரல் கொடுத்த பிறகு சுப்பிரமணியமும் ஏதோ முணுமுணுத்ததாகக் கேள்வி!

---

## பந்த்—குன்ஸ்ரூ லடாய்

### பம்பாய் குறித்து ஒருவரை ஒருவர் குற்றம் சாட்டுகின்றனர்

'பம்பாய் பிரச்சினையை டெல்லி சர்க்கார் தவறான வழியில் கையாண்டிருக்கிறார்கள்'

என்று, மாநில புது அமைப்புக் குழுவில் உறுப்பினராயிருந்த டாக்டர் குன்ஸ்ரூ மாநிலங்கள் சபையில் குற்றம் சாட்டினர்.

இதுகண்டு பொறாத உள்நாட்டு மந்திரி பண்டித பந்த், உடனே, "மாநில புது அமைப்புக் குழு தான், பலருக்கும் எரிச்சலை மூட்டக்கூடிய பரிகாரம் ஒன்றை பம்பாய் பிரச்சினைக்கு வழங்கிற்று; அதனால்தான், நியாயமாகப் பிரச்சினையை அணுகுமாறு பின்னர் விடுத்த வேண்டுகோள்கள் பயனற்றுப்போயின" என்று பதிலிறுத்தாராம்!

---

## நீலகிரி மாவட்ட

கிளைக் கழகச் செயலாளர்களுக்கு

7-5-56 பகல் 2-30 மணியளவில், குன்னூர் தி. மு. கழகப் பணிமனையில், செயலாளர்கள் கூட்டம் நடைபெறும். அதுபோது, மாநில மாநாட்டிற்கான தீர்மானங்கள் ஆய்வுக்குவரும்.

---

பழப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் இந்தியாவில் மொத்தம் 602 உள்ளன. இவற்றுள் 137 தொழிற்சாலைகள் பம்பாய் மாநிலத்தில் இருக்கின்றன.

---

## சென்னை மாணவர் மன்ற உறுப்பினர் பொதுக்கூட்டம்

6—5—56 3-30மணிக்குமேல், பென்னை—1, 17, இரத்தின முதலி தெருவில் உள்ள மன்ற நிலையத்தில், மேற்படி கூட்டம் நடைபெறும். அவ்வமயம், மன்ற வெள்ளி விழாவைச் சிறப்பாக நடத்துவது குறித்து முடிவுசெய்யப்பெறும்.

---

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# மாநில மாநாடு

## பிரதிநிதிகள் தேர்வு குறித்து விளக்கம்

★

### மாவட்டக் கழகங்கள்:

எல்லா மாவட்டக் கிளைகளின் உறுப்பினர்களும் மாநாட்டுப் பிரதிநிதிகளாகக் கலந்து கொள்ளும் உரிமையுடையவர்களாவர்.

### கிளைக் கழகங்கள்:

ஒவ்வொரு கிளையின் செயலாளரும், மற்றொரு பிரதிநிதியும் கிளைக்கழகச் சார்பில் மாநாட்டுப் பிரதிநிதிகளாகக் கலந்து கொள்ளும் உரிமை பெறுகின்றனர். செயலாளரே மாவட்ட உறுப்பினராயிருந்தால் அதற்காக வேறு ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்பதைக் கழகத் தோழர்கள் கவனிக்க வேண்டுகிறோம்.

—தலைமை நிலையம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

---

## திருக்குறள் சிறப்புக் கூட்டம்

5—5—56 மாலை 5-30 மணியளவில், பெங்களூர் — உக்கடபாளையம் மைதானத்தில், மாலா பகுத்தறிவுப் படிப்பகச் சார்பில், திரு. தண். கி. வெங்கடாசலனார் தலைமையில், மேற்படி சிறப்புக் கூட்டம் நடைபெறும். 'திருக்குறள் ஏன் தேவை' என்ற பொருள்பற்றி திரு. வி. முனுசாமி, எம். பி. பேசுவார்.

---

## முத்தமிழ் விழா

5—5—56 மாலை 6 மணியளவில், தேசுமுகிப்பேட்டையில், திரு அ. மாணிக்கம் தலைமையில், மேற்படி விழா நடைபெறும். தோழியர் அருண்மொழி, தோழர்கள் மு. இராசமாணிக்கம், சு. குருநாதன், ந. நாராயணன் பேசுவர். தோழர் ந. நாராயணன் குழுவினர் இசை விருந்தளிப்பர். முத்தமிழ் மன்றத்தினர் நடிக்கும் 'நச்சுக் கோப்பை' நாடகம் நடைபெறும்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

